உ

சிவமயம்.

# ஆன்மவிசாரம்

## இரண்டாம் பாகம்.

(ஓர் பிராமணோத்தம ஸாது எழுதியது.)

இஃது

யாழ்ப்பாணம்

சிவகுருநாத குருபீடத்தாரால்

யாழ்ப்பாணம் சைவப்பிரகாச யந்திரசாலையில்

அச்சிடுவித்து வெளியிடப்பெற்றது.

சுக்கிலவருஷ பங்குனிமீ.

1930.



உ

சிவமயம்.

# ஆன்மவிசாரம்

## இரண்டாம் பாகம்.

(ஓர் பிராமணோத்தம ஸாது எழுதியது.)



இஃது

யாழ்ப்பாணம்

சிவகுருநாத குருபீடத்தாரால்

யாழ்ப்பாணம் சைவப்பிரகாச யந்திரசாலையில்

அச்சிடுவித்து வெளியிடப்பெற்றது.




சுக்கில௵ பங்குனி௴.

1930.

விலை சதம் 25.

திருவாரு மன்பரெலா மோதியரன் சேவடியைச்
சேரும் வண்ணம்
குருவாரு மெழிலான்ம விசாரமெனு நூலெழுதிக்
கொடுத்தான் போதின்
மருவாரு முயர்கொழும்புத் துறைவாச னேரம்பன்
வரத்திற் றோன்றுந்
தருவாரும் பூசுரன்சுப் பிரமணிய பண்டிதனுஞ்
சாது மாதோ.

சிவமயம்.

# பதிப்பாசிரியர் குறிப்பு.

ஆன்மவிசாரம் எனப்படும் இச்சிறந்த சிறியநூல், உலக நிலையாமையையும், ஆன்மாக்களிடத்து இயல்பாகவுள்ள அகங்காரமுனைப்பாகிய மலபந்தத்தையும், அதன் சேட்டைப் பிரிவுகளையும், அவை செய்யுங் கொடுமைகளையும், அவற்றை நீக்குதற்கான சாதனங்களையும், அவற்றை நீக்காவழி உயிர்கட்கு நேரும் இடர்களையும், இன்பதுன்பங்கள் இத்தகையவென்பதையும், அவற்றுள் உயிர்க்கிதஞ்செய்வதிது, அகிதஞ் செய்வதிது என்பதையும், பிறரிடத்துக் காணப்படும் தோஷங்களைப் பரிகரிக்கும் முறைகளையும், சகலரிடத்தும் சமபாவனை பண்ணுவதற்கியைந்த உபாயத்தையும், இன்ன பிறவற்றையும் வேதாந்த சித்தாந்த விரோதமின்றித் தெள்ளிதில் எடுத்துக் கூறும் ஓர் அநுபவ நூலாகும். இந்நூலின் ஆசிரியரெனிலோ, யாழ்ப்பாணம் சிவகுருநாத குருபீடத்து மூலகாரணராயிருந்த பிரதமாசிரியருக்குக் குருமரபிற் சகபாடித்துவம் பூண்டவரும், ஞானநுபவமுடையவரும், நைஷ்டிகப் பிரமசாரியாக விளங்கியவருமாகிய கொழும்புத்துறை பிரமஸ்ரீ ஹே. சுப்பிரமணிய ஐயரவர்களாவர்.

இந்நூலாசிரியர் 1903-ம் ஆண்டு எழுதிய 12-ம் 13-ம் இலக்கம் இடப்பட்ட கையெழுத்துப் பிரதிகள் அவர் சுற்றத்தாரொருவரால் உதவப்பட்டன. அவ்விரண்டு பிரதிகளிலுமுள்ள விஷயங்களை "ஆன்மவிசாரம்" என்னும் முகநாமத்துடன் 1923-ம் ஆண்டில் "இந்து சாதன" பத்திரிகையிற் பாகம் பாகமாக வெளிவந்துள்ளன. அவ்வியாசங்களை இந்து சாதனத்திற் படித்துணர்ந்தவர்களுள் யாழ்ப்பாணத்தில் வித்தியா பரிபாலனப்பகுதியில் அமர்ந்துள்ள ஓர் அறிஞரும், இலங்கைத் தபாற்கந்தோர்ப் பகுதியில் அமர்ந்துள்ள ஸ்ரீமாந் சு. தம்பாபிள்ளை அவர்களும், சிறுப்பிட்டி ஸ்ரீமாந். கு. கனகசபை உபாத்தியாயரவர்களும், புடைவைவியாபாரியாயிருந்த நாயன்மார்கட்டு ஸ்ரீமாந். நா. சி. பெருமாள் பிள்ளை யவர்களும் இன்னும் சில அன்பர்களும் அவற்றைத் திரட்டி ஒரு நூலாக அச்சிடின் லோகோபகாரமாகுமெனக் கூறி, அங்ஙனம் அச்சிடுதற்குப் பொருளுதவியும் புரிந்தனர். அவர்கள் செய்த நன்றி என்றும் பாராட்டற்பாலதாகும்.

(இது 1924-ம் ஆண்டில் வெளிவந்துள்ளது)

அதன்பின்னர் 3-ம் இலக்கம் இடப்பட்ட கையெழுத்துப் பிரதியும் மேற்படியாரால் உதவப்பட்டது.

இப்பிரதி அதிகம் சிதைவுறுது "தத்துவஞான உபதேசம்" (மெய்யுணர்வுப் போதனை) என்ற முகநாமத்தோடு காணப்பட்டது. குறித்த பிரதியில் உள்ள முகநாமத்தோடு ஆன்ம விசாரம் இரண்டாம் பாகம் என இதனை வெளியிட்டுள்ளோம்.

கீர்த்தியோடு ஆயுள்வேத வைத்தியராயிருந்த ஸ்ரீமாந். க. முத்துக்குமாரு அவர்களும், சட்ட சபை அங்கத்தவராயிருந்த ஸ்ரீமாந். ஆ. கனகரத்தினமவர்களும், யாழ்ப்பாணம் அரசினர் பாடசாலை (Stanley School) பிரதமாசிரியர் ஸ்ரீமாந். தி. அருணாசலமவர்களும், சிறுப்பிட்டிச் சைவவித்தியாசாலை ஸ்தாபகராகிய ஸ்ரீமாந். கு. கனகசபை உபாத்தியாயரவர்களும் இன்னுஞ் சில அறிஞர்களும் இதனை அச்சிடும் வண்ணம் ஊக்கப்படுத்திப் பொருளுதவியும் புரிந்தனர். இவர்கள் அறிவின் பெருமையை நாம் வாளா பாராட்டுவதிலும் பின்பற்றி யொழுகுவதே மரபாகும்.

"எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்ற பிரகாரம் இந்நூலகத்துள்ள அரிய ஞானனுபவ சாரங்களை உய்த்துணர்ந்து ஈடேறுவது அன்பர் கடனாகும்.

மெய்கண்டதேசிகன் றிருவடி வாழ்க.

---

உ

சிவமயம்.

யாழ்ப்பாணம் ஏழாலை வாசரும்
பிரபல ஆயுள்வேத வைத்தியரும், சைவநூற் போதகாசிரியரும்
ஆகிய
அருளானந்த சிவம் என வழங்கும்
ஸ்ரீமத். ஐ. பொன்னையா அவர்கள்
எழுதிய

# நூன்முகம்.

மக்கள் இருவினைக்கீடாய்த் தாம் எடுத்துக் கொண்ட பிறவியில் அனுபவிக்கும் சுகதுக்கங்களில் ஈடுபட்டவராய் அவற்றை அபிமானித்து அதனால் மேன்மேலும் புண்ணியமும்பாவமும் என்றுகூறப்படும் இருவினைகளைச் செய்து பிறப்பிறப்புக்களாம் பெருந் திரைச் சுழியிற்பட்டு மீளும் வழியறியாது தவிப்பர். அத்தவிப்பொழித்து என்றுமழியாப் பேரின்பவீட்டை அவர்க்களிக்கத் திருவுளங்கொண்ட மட்டற்ற பெருங் கருணையாளனும் இறைவன் அவர்பொருட்டு அள விடப்படாத வேதாகமங்களைத்தோற்றுவித்தருளினன். அவையும் சீவர்களின் பக்குவபேதம் நோக்கிப் பல வாய்ப் பலமுடிபுகளையுடையவாயின. ஒவ்வோர் துறையிலும் அவ்வவற்றில் வல்ல ஆசிரியர்கள் பலர் தோன்றி வழிநூல்கள் பலவற்றைச் செய்வாராயினர். அதனாற் சமயங்களும் பலவாய் விரிந்தன.

அப்பலவும் இறைவனையும் அவனை அடையும் நெறியையும் உணர்த்துதலையே முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ளவையாகலின் எல்லாம் பயன்படுவனவே. இவ்வுண்மைபற்றியே பேரறிவாளராகும் ஆளுடைய பிள்ளையார், "ஆட்பாலவர்க்கருளும் வண்ணமு மாதி மாண்பும், கேட்பான்புகி லளவில்லை கிளக்கவேண்டா" என்று அருளிச்செய்வாராயினர்.

இங்ஙனம் ஒன்றேடொன் ருெவ்வாதனபோலக் காணப்படும் பலவகைப்பட்ட சமயங்களிலும் சமய நூல்களிலும் "இதுவாகும் அதுவல்ல" என்னும் பிணக்கொழித்து உண்மையை யுணர்த்துதற்கெழுந்த நூல்கள் பல உளவாயினும், அவையெல்லாம் திருந்திய கல்வியும் நிறைந்த புத்தியுமுடைய உயர்ந்த பக்குவர் களுக்கே பயன்படுவனவாம். ஏனையோர் அவற்றை யும் ஏனைச் சமய நூல்களோ டொருங்குவைத் தெண் ணிப் பிணங்குவர்.

அத்தகையோர்க்கும் அவற்றின் உண்மைகாணத் தகுந்த உயர்ந்த விவேகத்தையும் சித்தசுத்தியையும் உண்டுபண்ண வல்லது மெய்புணர்வுப்போதனைகள் நிறைந்த "ஆன்மவிசாரம்" என்னும் இச்சிறிய நூல்.

இது உருவத்திற் சிறியதாயினும் பொருட் பெருமை உடையதாய், கல்வியறிவிற் குறைந்தோரும் ஓதியுணரும் வண்ணம் இலகுவான தமிழ்நடையில் இயன்றதாய் உள்ளது.

இதிற் காணப்படும் உயர்ந்த நீதிகளும் நல்லொழுக்கங்களும் மக்கள் உலகவாழ்க்கையில் நிறைந்த சமாதானத்தோடும் மகிழ்ச்சியோடும் வாழ்தற்கு உபாயமாவதன்றியும் சித்தசுத்தி வாயிலாக இருவினையொப்பு மலபரிபாகத்தை உண்டுபண்ணுதற்குச் சாதனமுமாவனவாம்.

அன்றியும் இருவினையொப்பு மலபரிபாகங்களினியல்பும் அவை இறைவன் திருவருளாலேயே சித்திக்கவேண்டுமென்பதும் இவைபோன்ற பிறவும் இந்நூலின்கண் நன்கு விளக்கப்படுகின்றன.

இறைவழிபாட்டை மறுத்து ஒழுக்கத்தையே பிரதானமாகக்கொள்ளும் தீய சமண் பௌத்தக்கொள்கைகள் பல்வேறுருக்கொண்டு ஆக்கிரமித்தெழுந்து அறிவிற்குறைந்த மக்களை அல்லலுறுத்தும் இக்காலத்தின் இயல்பையுணர்ந்தோர் இத்தகைய சிறந்த சிறிய நூல்கள் வெளிவருதலைப் பெரிதும் வேண்டுவர்.

அங்ஙனம் வேண்டுங் காலத்தில், யாழ்ப்பாணம் கொழும்புத்துறையில் நைஷ்டிகப்பிரமசாரியாகவிருந்த பிரஹ்மஸ்ரீ ஹே. சுப்பிரமணியஐயரவர்களால் எழுதிவைக்கப்பெற்ற மெய்யுணர்வுப்போதனை நிறைந்த "ஆன்ம விசாரம்" என்னும் இந்நூலை அச்சிட்டுதவிய யாழ்ப்பாணம் ஸ்ரீசிவகுருநாத குருபீடத்தாரின் நன்முயற்சி என்றும் பாராட்டப்படத்தக்கது. சுபமஸ்து.

---

உ

சிவமயம்.

ஸ்ரீசற்குருவேநம:

# ஆன்மவிசாரம்

## இரண்டாம் பாகம்.



## தத்துவஞான உபதேசம்.

## (மெய்யுணர்வுப் போதனை.)



மாநுடராகிய நமக்கு உலகத்தில் இன்பம் இருவிதம். அஃதாவது பஞ்சப்பொறிகளாலும் மனத்தாலும் அனுபவிக்கும் விடயானந்தம் ஒன்று; மற்றது கீர்த்தி. முந்திய விடயானந்தம், தான் பஞ்சப்பொறிகளாலும் மனத்தாலும் அஃததற்குரிய இன்பங்களை நுகரும் இன்பம். மற்றக் கீர்த்தியென்றது: தான் மற்றவர்களுடைய பொறிகளுக்கும் மனத்துக்கும் இன்பத்தை நுகர்த்தும் இன்பம். இவையிரண்டும் முறையே இரத்தலும் ஈதலும் போலுமாதலால் இவற்றுட் கீர்த்தியே சிறந்தது என்பதைப் பிரயாசப்பட்டு விளக்கவேண்டுவதில்லை. தான் பிறர் பாடுங் கீதத்தைக் கேட்டு மகிழ்வதற்கும், பிறர் கேட்டு உவக்கும்வண்ணம் தான் பாடு

வதற்கும் எவ்வளவு தாரதம்மியம்? இதனாலன்றோ கீர்த்தியை அறிவாளிகளும் மேன்மக்களும் விரும்புவதும், மற்றை விடயானந்தத்தை அறிவினரும் கீழ்மக்களும் விரும்புவதும் வழக்காயிருக்கின்றது. மாயாகாரியமான உலகவின்பமெல்லாம் அநித்தியமேயாயினும், விடய இன்பம் அந்தந்த க்ஷணத்திலேயே அழிவது; கீர்த்தி ஆயுசுபரியந்தம் நிற்பது. மானுடரைத தான் ஏதொரு காரியத்தில் உவப்பிக்கிறானோ அவன் கீர்த்திமான். விளங்கச் சக்தியற்ற ஓர் சபையிலே தன் வித்தியா சாமர்த்தியத்தை இகழ்ந்தார்களாயின் அதுகாரணமாகத் தான் சமர்த்தனல்லனென்று அவகீர்த்தியாய் விடுமா? இனி, வித்தியா சாமர்த்தியனல்லாத ஒருவன் நடிப்பால் தன்னின் மிகவிழிந்த மூடர் சபையிலே சமர்த்தன் என்று மதிக்கப்பட்டமை கொண்டு தான் கீர்த்திமான் என்று முடிந்துவிடுமா? ஆதலால் யார் யார் மதிக்கினுமென்? இகழினுமென்? உலகோர் வியக்கத்தக்க சாமர்த்தியம் தனக்குளதாக அமைந்த உண்மையே கீர்த்தி.

ஈசுவரனுடைய பஞ்சப்பொறிக்கும் இன்பஞ் செய்தல்தான் பூசை எனப்படும். எங்ஙனம்? திருச்செவிக்குக் கீதம், திருக்கண்களுக்குத் தீபாதி உபசாரம், நாவுக்கு, நைவேத்தியம், மூக்குக்குச்

சுகந்ததூப சுகந்த பரிமளம், திருமேனிக்கு அபி ஷேகம் மென்மலரால் அர்ச்சனை.

இனி, அவர்மேலே அவருடைய குண விசேடங்கள் பராக்கிரமங்கள் அமைய விசித்திரமான நவரச அமைதி பெறப் பாமாலை இயற்றுதல் "கீர்த்தி" என்ற பகுப்பில் அடங்கியது. ஆதலினாலன்றே தம்மேற் பாடுதலை ஈசுவரன விசேட பணியாகக் கொண்டாரென்பது புராணாதிகளில் வியக்கப்படுகின்றது.

பிறர் குற்றந் தூற்றலாகிய புறங்கூற்று: ஆற்றாமை, பொறாமை, செருக்கு, களிப்பு (மதம்) என்னும் இந்நான்கு துர்க்குணமுங் காரணமாக நிகழும்.

அவற்றுள் ஆற்றாமையாவது: பிறன் தனக்குத் தீமை செய்வானாக, தானும் அதைப் படவேண்டியவனாயிருப்பின் ஆற்றானவன்; அது காரணம் பற்றியது ஆற்றாமை.

பிறன் ஆக்கங் கண்டு மனஞ் சகியாமையே பொறாமையாம். அதனால் அவனிடத்துள்ள இழிபுகளை எடுத்துப் பிறர்க்குச் சொல்வதே அலர்தூற்றலாகும்.

செருக்கு: தான் அதுபோலுங் குற்றமில்லாதவன் பிறன்மேலுள்ள குற்றத்தைத் தூற்றல்.

களிப்பு: உவகை மிகுதியினலே பிறிதொரு காரணம் வேண்டாமலே தூற்றல்.

நீ எதைச் செய்யப் புகும்போதும் ஈசுவரனுக்குப் பிரீதியாகத் தகுவதனைச் செய்.

நீ பிற ஆன்மாக்களுக்கு யாதொருவிதமாயேனும் இம்சை செய்பவனுயிருக்குமட்டும் ஈசுவரனுடைய தயவைப் பெறமாட்டாய்.

நீ பிறனுக்குக் கோபத்தைவிளைக்கினும் இம்சையே; பொருமையை விளைக்கினும் இம்சையே. நீ பிறனுக்குக் காமத்தை விளைக்கினும் இம்சையே. நீ உனது வடிவழகியான மனையாளைப் பிறனெருவனுக்குக் காட்டினய். அதுபற்றி அவனுக்குக் காமமுண்டாயிற்று. அவனுக்குண்டான மோகத்துக்கு நீயே காரணன்.

உன்மேலே கோபங்கொண்டவன் அதைச் சாதித்தலால் அவன் தன் வருத்தந் தீரும்படி, உனக்கு அவனல் வருஞ் சிட்சையை நீ சகித்தலும் அருளே (புண்ணியமே). உன் மேலே பொருமை கொண்டவனுக்கு அது தணியும்படி தாழ்மையாய் நட.

## ஓர் தெளிவு.

ஈசுவரன் தெளிவான பக்குவர்க்கேயன்றி மற்றையோர்க்குத் தன்னைச் சம்சய நிலையாகவே விளக்குவன். அதெல்லாம் பாசநீக்கத்தின் பொருட்டாக வேண்டியது பற்றியே நிகழ்வது. புராணாதி சாஸ்திர விருத்தங்களெல்லாம் இந்தச் சமசய விளக்கத்தை யாக்குவதற்கே நிமித்தமாய் உண்டுபட்டன. பலதிறக் கொள்கைகளாய்ச் சமயங்கள் இருப்பது மிதுபற்றியே.

பிறரால் உனக்கு இம்சை உண்டாகும் போது, இதற்குக் காரணம் ஈசுரா நுக்கிரகம் உனக்குப் போதாமையே என்பதைத் தெளிவாய் அறிந்துகொள். ஆகவே மேலும் மேலும் அங்ஙனம் ஆகாமைப் பொருட்டு நீ செய்யத்தக்கது ஈசுவர அநுக்கிரகத்தைப் பெற இடையறுமல் முயற்சிப்பதே.

பிறர் குறறஞ்செய்தவழி நாம் பொறுக்கவேண்டுவது மற்றைப் பூதங்களாலும் தெய்வங்களாலும் தன்னாலும் நிகழ்வனவற்றைப் பொறுத்தல் போல ஈசுவர ஆஞ்ஞை என ஒத்து ஒழுகவேண்டியது. இன்னும் அதன்மேலும் ஈசுவரனுடைய தயவைப் பெறுதற்கு அதுவே முக்கிய சாதனமாயிருப்பது

பற்றியும் அங்ஙனம் ஒழுகவேண்டியது. இன்னும் அதுமட்டோ பிறன்செய்த குற்றத்துக்கு நாம் சிட்சைசெய்ய முயல்வோமானல் அநேகமாய் அக் குற்றமெனப்பட்டவை குற்றமோ அன்றோ எனச் சம்சயத்துக்கு இடமாயிருப்பது பெரும்பான்மை யாதலால் உண்மையுணர்ந்தே குற்றமென முடிபு செய்யவேண்டியது. ஆகவே எவ்விதத்திலும் பொறுதியே தக்கது.

நாம் உறுதியெனப்பட்ட ஆன்மலாபத்தைப் பெற வேண்டுதற்கும் இடையறுது ஈசுவரனுக்குப் பணிசெய்ய வேண்டியது. அவன் அகோராத்திர மாய் எஞ்ஞான்றும் நம்மைப் பந்தத்தினின்று நீக்கும் வண்ணம் செய்துகொண்டுவரும் உபகாரத் திற்காகச் செய்ந்நன்றி தவருமைப் பொருட்டும் அவனுக்கு இடையருத பணியாளனுகவேண்டியது. உலகத்திலே நமக்குச் சம்பவிக்கும் தீங்குகளுக்குப் பரிகரிப்பாகும் பொருட்டும் அஃதே செய்யவேண்டு வது. உலகத்திலே நமக்கு இடையூறுகள் சம்ப விக்குங்கால் அவை அவனுடைய திருவருள் நமக்குப் போதாமைபற்றியே நிகழ்வன ஆகலின் அதனைப் பெற்றுக்கொள்ளுதற்பொருட்டும் அஃதே

செய்யவேண்டுவது. ஆகவே எல்லாவிதத்திலும் ஈசுவரனுக்குப் பணியாளனுகவேண்டும் என்பது உறுதியே. ஆதலால் விவேகிகள் யாவரும் யாவற்றுக்கும் பரிகாரமாக அதனையே மேற்கொள்வாராவார்.

நன்கடம்பனைப் பெற்றவள்பங்கினன்
தென்கடம்பைத் திருக்கரக்கோயிலான்
தன்கடன்அடி யேனையுந்தாங்குதல்
என்கடன்பணி செய்துகிடப்பதே.

தனக்குத் தீங்கு செய்த பிறனுக்கு எவன் சாபம் இடுகிருனே அவன் பதிலாகத் தீங்கு செய்வோனிலும் வல்லமை குறைந்தவன். இது சரீர வலிமை இல்லாத ரிஷிகளிடத்தே இருந்தமை சரித்திரங்களால் அறியப்படுகின்றது. உலகநடையிலே திட்டுவதென்பதும் இதுவே.

ஒருவன் தனக்குத் தீங்குசெய்த பிறன்மேல் அதற்காகப் பழிசாதிக்கும் எண்ணம் உள்ளமட்டும் தான் ஈசுவரனுக்கு அன்பன் ஆகமாட்டான். அஃது அற்ற பின்பே ஈசுவரனுக்கு அன்பனுகத் தக்கவனுவான். பூதங்களாலும் தெய்வங்களாலும் நிகழ்வனவற்றிலே ஈசுவரன்மேற் பழி சாதிக்க

வேண்டியதாயிருக்க அவற்றிற் றுணியாமை ஈசுவரன் வலியனும் அசப்படற்கரியனும் இருப்பது பற்றியே. அங்ஙனமன்றோ? பிறன் தீங்குசெய்த வழி அவன்மேற் பழி சாதிக்கத் துணிவது இதற்குத் திருஷ்டாந்தமாயிருக்கும். என்னையெனின், பிறன் தீங்குசெய்தவழி அவன்மேற் பழி சாதிக்க மனம் ஊக்கினவன் அதுபோலும் பிறவற்றிலும் அங்ஙனம் ஏன் ஊக்கான்?

தனக்கு வரும் துன்பங்களுக்கு விலகித் தப்பிக் கொள்ள வழிதேடுவது தவறு. என்னையெனின், வரும் துன்பங்கள் எதுவும் ஈசுவர ஆஞ்ஞைபற்றியே வருவன. விலகினும் அத்துணைத் துன்பங்கள் தன்னைவந்து பீடியாமல் விடமாட்டா. ஆதலால் வருந்துன்பங்களை உடன்பாட்டோடு சகித்துக்கொள்வது ஈசுவரப் பிரீதியைத் தரும்.

தமக்கு மகிமையை நிலைபெறுத்த நிமித்தமென்றே மெய்யுணர்வில்லார் பலரும் அகங்காரத்தை அபிமானிக்கின்றனர். எவன் அகங்காரத்தை அபிமானியாமல் தன் பாதுகாப்பை ஈசுவரன் துணையில் வைத்திருக்கிறானோ அவனேதான் தனக்கு மகிமையை நிலைபெறுத்துவானவன்.

உலகத்திலே பிதாவானவன் தனக்கு அடங்கித் தன்னிடத்திலே பாதுகாப்பை நம்பியிருக்கிற பிள்ளைகளுக்குத் தான் முக்கியம் பாதுகாப்பாளனும், அங்ஙனமாகாது தன்னிட்டம் ஒழுகும் அடங்காப் பிள்ளைகளிடத்தில் அபிமானம் வையாமலும் ஒழுகுவதும் காண்கின்றோம்.

## ஈசுவரன்.

சத்தியமே யாவர்க்கும் ஈசுவரன். சத்தியமாவது தானறிந்த உண்மைக்கு மாறுபடாத நடை. இன்பத் துன்பங்களிலெல்லாம் சகல சீவர்களது நிலைமையும் நம்மைப்போலவே இருக்கக் காண்கின்றோம். ஆதலால் சகல சீவர்களையும் நாம் இன்பத் துன்பங்களிலும் உறுதிப்பயனிலும் நம்மைப்போலவே பாவித்து ஒழுகவேண்டியது. சத்தியத்தை ஆள்பவன் எவனோ அவனே ஈசுவரனது உண்மையைப் பெறுபவனாவான்.

யாருக்கெனினும் தீங்கு செய்கிறவன் தனது அறியாமை காரணமாகவே அது செய்கின்றான். அறியாமையால் நிகழ்வனவற்றை யெல்லாம் பொறுத்துக்கொள்ளவேண்டியதே. அங்ஙனமன்றித் தெரிந்து செய்தானெனின், அதுவும் மோகம்,

பொறுமை, செருக்கு, களிப்பு என்னும் காரணங்களுள் ஒன்றுபற்றியே நிகழ்ந்திருக்குமாகலின் அச்செயலெல்லாம் அறியாமை காரணமே.

நமக்குத் தீங்கு செய்தவனுக்குப் பதில் செய்து சிட்சிக்க அதிகாரி நாமல்லேம். தீங்கு செய்தவனைச் சிட்சித்தற்கு உரியான் அரசன் எனனும் உலகவழக்குப்போலவே நமக்குத் தீங்கு செய்தவனையும் சிட்சித்தற்குரியான் ஈசுவரனே என்னும் உண்மையை உணர்ந்து ஒழுகக்கடவேம. இரக்கப்பற்றியாயின் அது செய்யத்தகும்.

## ஞான யோகம்.

காமக் குரோதாதி தீக்குணங்களும் அவற்றின் காரணமாய அகங்கார மமகாரங்களும் அழிந்து அதன்மேலும அவை காரணமாய அசுத்தவாதனைகளும் கழன்று நினைவிறக்கும் நிலை ஞானயோகமாம்.

## தியாநயோகம்—ரூபத்தியாநம் கர்மயோகம்.

காமக்குரோதாதி துர்க்குணங்கள் முழுதும் அற்றவனுக்கு ஞானயோகமே கைகூடுவதாயிருக்கும். துர்க்குணங்கள் சில ஒழிந்தும் சில ஒழியா

மலும் இருக்கும் நிலையிலே ஈசுவரன்மேலிட்ட அன்பின் மிகுதியுடையோனாகிய பக்தியோகன் லைதலதாரைபோல ஈசுவரனை ரூபத்திருமேனியாக இடைவிடாது பாவித்தலே தியான யோகமாகும். இதுவே பக்தியோக மென்பதும். துர்க் குணங்களுள் ஏதொன்றுவது அழியப் பெறுதானுக்கு அது காரணமாக நினைவொழியமாட்டாமலிருக்கும். அதனால் அவனுக்கு ஞானயோகம் கைகூடுவதரிது ஆயினும் இந்நிலையார் சிலருட் பக்குவ விசேடத்தினால் ஈசுவரன் மேலிட்ட அன்பின் மிகுதியுண்டாயின் நினைவுக்குக் காரணம் இருக்கவும் அவற்றிற் செல்லாது அன்பால் ஈசுவரன்மாட்டிழுக்கப்படுவன். அஃது என்போல வெனின், காமமோகிய ஓர்பாலிய புருடன்; தனக்குகந்த ஓர் மங்கையைக்கண்டு அவன் சிந்தனைக்குரிய விஷயங்களே அநேகம் உளவாயிருப்பவும், காமமோகத்தால் அம் மங்கையையே இடையறாது பாவிப்பான். இவனுடைய பாவனைக்குத் தேய்வுண்டாகவும் வருமாதல்போலப் பக்தியோகியின் பாவனைக்கும் தேய்வுண்டாகலாம். காமமோகியின் பாவனை சிந்தனைக்குரிய விஷய சங்கடங்கள் மேலிட்ட வழியேனும் அவண் மேலிட்ட மோகம் குன்றிய வழியேனும் குன்றவரும். இங்ஙனமே பத்தியோகிக்கும் ஒழியாதிருக்கும் துர்க்

குண சேட்டை விஞ்சிய வழியேனும் ஈசுவரன் மேலிட்ட அன்பு குன்றவந்த வழியேனும் அவன் பாவனையாகிய பத்தியோகம் சிதையும்.

துர்க்குணங்களும் உளவாயிருப்ப அவற்றை அழித்தொழியாது அவற்றை அடக்குவது மாத்திரையாகச் செய்யும் எந்த யோகமும் பயன்பெருது. அது ஈசுவரனிடத்திலே ஏதும் காமிய பலன்களைப் பெறுதற்கு மாத்திரமே உரியது.

ஒரு ஏகாந்த ஸ்தானமான வனத்திலே ஓர் தேவ கோட்டத்தின் பக்கத்தே ஒரு சாது பலகாலமாக வாசஞ் செய்துகொண்டிருந்தார். அந்தக் கோயிலின் கண்ணதாகிய தெய்வத்துக்குப் பற்பல தூரதேசங்களிலிருந்தும் ஜனங்கள் வந்து வழிபாடு செய்கிறதுண்டு. அந்தச் சாதுவினிடத்தே பத்திமையும் பழக்கமுமுடைய இரண்டு பக்தர்களோடு ஒரு புதியோனும் வந்து ஒரு நாள் அவரை வணங்கி நின்றுன். அப்பொழுது புதியோன் சாதுவைப் பிரார்த்தித்து "சுவாமீ, எனக்குள்ள ஒரு கண் குருடாயிருக்கும் இந்தத் தோஷத்தை உமது மகத்துவத்தால் மாற்றியருளல் வேண்டும்" என்று வேண்டினன். அப்பொழுது அந்தப் பெரிய

வர் "அடே, பக்தா, சாதுக்கள் பிறர் வேண்டியவற்றையெல்லாம் அநுக்கிரகிக்கத் தக்கவர்களாய் இருக்கவேண்டுமென்பது அவர்க்கு நியதலக்ஷணமல்ல. தவத்தான் மேலிட்ட சிற்சிலர் மாத்திரம் தமது தெய்வத்துவத்தால் அப்படி வேண்டியவை சிலவற்றை அநுக்கிரகிக்கத்தக்கவராய் இருப்பதுண்டு. ஈசுவர சங்கற்பமாகச் சாதுக்களுள்ளும் சிலருக்குஅப்படியேதும் அநுக்கிரகபலஞ் சாதிக்க அமைந்து இருப்பதுமுண்டு. மானுடராயிருக்கும் ஒவ்வொருவருக்கும் தேகம் அழியுங்காறும் தத்தமக்குரிய இருவினைப்பயன்களை அனுபவிப்பது தப்பாது. அங்ஙனமாக நாம் நமக்குரிய வினைப்பயனை ஒழிக்க வல்லமாயினன்றோ பின்பு பிறர்க்குரியதை ஒழித்தல் கூடும். நல்லது இந்த வரத்தை இங்கே அநுக்கிரக தேவதையாய் எழுந்தருளியிருக்கும் இந்தத் தெய்வத்தினிடந்தான் வேண்டுவாயாக" என்றார். பக்தன், "சுவாமீ, அப்படிப் பலமுறை பிரார்த்தித்தும் இந்தத் தெய்வம் இதை எனக்கு அநுக்கிரகஞ் செய்யவில்லை; அதனாற்றான் உம்மிடம் வேண்டினேன்" என்றான். சாது "அடா, மதிகெட்டவனே! தெய்வமே அநுக்கிரகிக்க இஷ்ட

மற்றதை மற்றை யாராவது எப்படி அநுக்கிரகித்தல் கூடும்?" என்று அறிவூட்டினர். இருவினைப்பயனைத் தமது மலபந்தத்துக்கு மருந்தென வேண்டி நுகரும் சாதுக்கள் தாம் தமது உண்மை நெறிக்கு விரோதமாக அவற்றைப் பிறர் விஷயத்தில் நீக்கமுயல்வது எவ்வாறு சித்திக்கும்? சாதுக்கள் இருவினைப் பயன்களைத் தாம் வேண்டி நுகரும் இருவினையொப்புடையோர் ஆதலின், அவர் பிறர்க்கும் அவற்றை அங்ஙனமே வேண்டுவர்.

செருக்கு: தமக்கு ஏதும் மேம்பாடு கிடைத்தமை காரணமாகத் தம்மிடத்துண்டாவது. மேம்பாடு நிலையற்றதாகலின் செருக்கு நிலைபெறுதல் யாங்ஙனம்? ஆதலாற் செருக்கை ஆளுதல் மதிகேடு.

பிறன் தனக்குத் தந்த தலைப்பாகை அங்கி ஜோடுகளைப் பூண்டு செல்வானுக்கு அதுபற்றிச் செருக்கு உண்டாக இடமில்லை. அதுபோல் ஈசுவரனே நமக்குத் தரும் மேம்பாடுகள்பற்றி நாம் செருக்குறுதல் தகாது.

பிறன் எவனுக்காயினும் தான் ஒரு குற்றம் செய்தால் அதற்காக அவனுக்கு வணக்கஞ்

சமர்ப்பித்து அந்தக் குற்றத்துக்குப் பொறுதி கேட்கவேண்டும். இது செய்ய உடன்பாடில்லாதவன் மூர்க்கன்; ஆண்மையற்றவன். உலகம் அறிந்த மேம்பாடாளன் பிறரை வணக்கஞ் செய்யப் பொறுதி கேட்கக் கூசான். எவன் அற்ப மனுஷனே அவனே இதற்குப் பின்னிடுவான்.

தான் செய்த குற்றத்துக்குச் சிக்ஷை செய்யாமல் தன்னைக் காக்கும்படி அரசனிடத்தாயினும் ஈசுவரனிடத்தாயினும் வேண்டுதல் செய்பவன் உண்மைநெறியாகிய நடுவுநிலைமைக்கு மாறுபட்ட மூடனுவன். அவன் தான் பெற்றுச் சகிக்க வேண்டிய தண்டனைக்கு அஞ்சும் வீரமற்ற பெண்மையனுமாவன். தீங்கென்பனவெல்லாம்பிற ஆன்மாக்களுக்குச் செய்யும் இம்சையே. பிற ஆன்மாக்கள் அறிந்து மனம் வருந்துவதற்கேதுவாயிருக்கும் செயலே ஈசுவரத்துரோகம். அதுவே ஆன்மத் துரோகமுமாம்.

தான் பிறர்க்குச் செய்த குற்றத்துக்காகப் பெறக் கடவதாயிருக்கும் தண்டனைக்குத் தப்ப முயற்சி செய்பவனும் ஆண்மையற்றவனே.

பிற உயிர் ஒன்றற்குத் தான் தீங்கு செய்த போது "ஐயையோ! நான் இத்த உயிரை இன்ன

தீங்கு செய்து வருத்தினேனே" என்று தன்னைத் தான் நொந்து துன்புறுவதே தக்கது. இஃதன்றித தான் செய்த அத்தீங்கிற்காகத் தண்டனை பெறுமல் தப்ப வழிதேடுவது பேரிழிவு. தான் செய்த அத்தீங்கிற்காகப் பின்பு இரங்குவதுடையானுக்குமாத்திரமே ஒருவாறு அஃதொன்றே அத்தண்டனைக்குச் சிறிது பரிகாரமாகும். அவ்விரக்கமில்லாதவன் எத்துணைக் கடுந் தவந்தான் செய்யினும் ஈசுவரனும் அதற்குப் பரிகாரபலன் கொடார்.

சத்தியத்துவத்தில் மனுஷருடைய தாரதம்மியம் எவ்வளவு மட்டாயிருக்கிறதோ ஈசுவரனும் அவ்வளவாயே அவர்களை மதித்து நடத்துவார். துருக்கியசாதியார் இயற்கையிற்றானே முரட்டுத்தனமுடையவர்கள். அவர்களுக்காய் "அல்லா" வெனப் பெயர்பட்டுநிற்கும் ஈசுவரனும் அவர்கள் மற்றவர்களோடு ஒழுகும் இரக்கத்துக்குத் தக்க விதமாய் நிக்கிரகாநுக்கிரகங்களைச் சாதிப்பர்.

உலகத்திலே சீதோஷ்ண பாகங்களுக்குத் தக்கபிரகாரமாக அங்கங்கும் மானுடர்கள் உவண் உடை நடை முதலியவற்றிலே வேறுபட்டவர்களா

யிருக்கிறார்கள். அவ்வவர்களுக்குப் பதியாயமைந்த ஈசுவரனும் தத்தம இயல்பமைந்தவனே யென்பது அவ்வவர்க்கும் கொள்கையா யமைந்திருக்கிறது. இதனால் மறுமையில் அவ்வவர்க்குக் கிடைக்கும் மோக்ஷபதவியும் அவ்வவர் இயல்புக்குத் தக்க புவன அண்டமாயேயிருக்கும்.

தத்தம் மதமே உண்மை என்னும் நியமாமும் ஒவ்வொரு மதத்தார்க்கும் அமைந்த கொள்கையே.

எல்லா மதங்களேயும் ஒரே ஈசுவரனது ஆஞ்ஞை என உணரும் உண்மை அறிவாளர்தாம மெய்யுணர்ந்த ஞானிக ளெனப்படுவார்கள்.

நீ பிறர்க்குத் தீங்கு செய்தாயாயின், அவர்க்கு அதுபற்றி உண்டான வருத்தத்தை எவவாறுக வேனும் நீயே பரிகரித்து அவர்களைத் திருப்திசெய் தல் வேண்டும். உன்னால் வருத்தம் அடைந்த ஜீவ ருக்கு அது தணிந்து திருப்தி உண்டாகாதவரை உனக்கு உய்வு கிடைக்கமாட்டாது. நீ பிறனுக் குச் செய்த தீங்கு ஒன்றற்கு ஒருவிதத்தாலேனும் பரிகரிப்புச் செய்வதியலாதாயின் நீயும் அவனைப் போலவே அதுபோலுந் துயரத்தை உனக்கு உண்டாக்கி அதற்காக உன் சிவபரியந்தம்

துயரத்தை அனுபவி. எங்ஙனமெனின், சோழ ராஜா, பசுவைப்போலவே தானுந் தன் பிள்ளையையிழந்து துன்புற முயன்றதுபோலவாம்.

இங்ஙனமன்றி நீ பிறனுக்குச் செய்த துயரத்துக்காகப் பிராயச்சித்தஞ்செய்து அதன் பாவத்தைத் தணிக்க முயல்வது தவறு. உன்னால் பிறனுக்குச் சம்பவித்த வருத்தம் நீ செய்யும் பிராயச்சித்தத்தால் நீங்குமா? ஆனால் அவ்வருத்தத்தைத் தணிக்கும்வண்ணம் ஈசுவரனைப் பிரார்த்திப்பது மாத்திரம் தக்கதே. அதற்கான தண்டனையை விலக்கும்படி ஈசுவரனைப் பிரார்த்திப்பது தவறு.

பற்றுக்களெல்லாம் அற்று வாதனைமாத்திரத்தில் நின்றவனே யோகத்துக்குத் தக்கவன்.

## பற்றுக்களை ஒழிப்பது எதற்காக?

பற்றுக்களாற் பிறப்பு இறப்புக்களாகிய வேதனை எஞ்ஞான்றும் தம்மைப் பற்றிக்கொண்டு நிற்கும்; அதற்காகவே பற்றை ஒழிப்பதெனின், அது தக்கதன்று. பற்றுக்கள் ஈசுவரனுக்கு நாம் ஆட்படுதற்குத் தடையா யிருப்பது பற்றியே அவற்றை நாம் ஒழிக்கவேண்டியது.

பிரபஞ்ச வாழ்க்கையிலே மிக உழைத்தும் சித்திபெறாத சிலர், பரமார்த்தத்திற் புகுந்து பார்ப்போம் என்று அதில் முயன்று பார்ப்பதும் ஒருவிதம். இவர்கள்பாடு அதிலெப்படியோ இதிலும் அப்படியாய்த்தானிருக்கும்.

பிரபஞ்ச வாழ்க்கையிலே சித்திபெற்று நின்ற நிலையிற்றானே தனக்கு அநாதி தொடங்கி இடையறாது உபகரித்துவரும் ஈசுவரனுடைய தயவை விளங்கி அந்த நன்றியறிவால் அவனுக்கு ஆட்படப் பிரபஞ்சத்தை விடுகிறவனே உத்தமன். இவனுடைய நிலைக்குக் கலக்கம வராது.

தேவதண்டனைக்கேனும் இராசதண்டனைக்கேனும அஞ்சித் தீங்கு செய்யாமல் இருப்பாரும் சிலர்; இயலாத்தன்மையால் அது கூடாதிருப்பாருஞ் சிலர். தீங்கு செய்தால் அதுபற்றிப் பின் வரும் இடையூற்றுக்கஞ்சி அது செய்யாதிருப்பாருஞ் சிலர்; தமக்கு வரும் இழிவுக்கஞ்சுவதால் அது செய்யாதிருப்பாருஞ் சிலர்; இடம் பொருள் ஏவல் ஒன்றுமின்மையால் அது செய்யாதிருப்பாருஞ் சிலர்; இவை ஒன்றற்கும் அஞ்சாது அது செய்வார் மக்களாயினும் மிருகவர்க்கத்தினராவர்.

உயிர்களைத் தன்னைப்போல் அபிமானிப்பதால் பிறிதோர் காரணமும் வேண்டாது அருள் காரணமாகத்தீங்கு செய்யாதவனே உத்தமன்.

ஒருவனிடத்தில் சிவகாருண்ணியத்தாற் பாவஞ் செய்யாமையின் காமக்குரோதாதி துர்க்குணமெல்லாம் அழியவேண்டும். அப்பால் ஈசுவரன் மேல் அன்பினால உலகப்பற்று அழிதல்வேண்டும். இதுவே உண்மை வழி.

பரமார்த்தனாகவேண்டிய ஒவ்வொருவனும் முதல் ஆன்ம ஐக்கியம் பெற்றே அப்பால ஈஸ்வர ஐக்கியம பெறல் வேண்டும். முதல் ஆன்ம ஐக்கியம் பெறாதவன் ஈசுவர ஐக்கியத்தைப்பெறுதல் சித்தியாது.

உலகத்திலே "பாவி" என்றிருப்பவன் ஒன்றற்கும்இயலாதவன். இயலுமானால் அவன்றான் எல்லாத் தீங்குகளையும் செய்ய முன்னிற்பவனாவன்.

நீ பிறர்மேலே குற்றஞ் சாற்றுகின்றாய். நீ ஒருவாற்றானேனும் அங்ஙனம் உடையையன்றோ? எனின். 'அன்று' எனச் சமாதானஞ் சொல்ல யோக்கியையல்லை. பிறரைக் குற்றஞ் சாற்றும் போது நீ யோக்கியை என்பதுதானே உன் உள்ளக்கிடக்கை. இஃது எத்தகைய இழிவு.

பிறர்மேலே யாரும் குற்றம் தூற்றும் பொழுது, நீ அதை இகழ்ச்சியாகாவண்ணம் சமாதானஞ் செய்யத் தக்கவனுயிருக்க வேண்டும்.

நாம் பிறரோடு சம்பாஷிக்கும் அவசியமற்ற பொழுதுபோக்குப் பேச்செல்லாம் களிப்பே.

நோய் வறுமை மனக்கிலேசம் என்னும் இவைகள் அற்றிருக்கும் இன்பமான நிலையானது களிப்பைக் கிளப்பிவிட்டுப் புறங்கூற்றுப் பயனில்சொல் புளுகு என்னும் உரைத் தவறுகளை விளைக்கின்றது. இன்பமான நிலை தீங்குகளை விளைத்தற்கே தக்கது.

ஒரு வைத்தியசாலையிலே அநேகர் நோயாளிகளாய் இருந்தார்கள். அவர்களுள் முந்தி ஆரோக்கியம் பெற்றவர்கள் பெறுது வருந்துகிறவர்களை இகழ்வது வழக்கா?

பற்றுக்களெல்லாம் அற்றும் அசுத்த வாதனை நிற்பது மனத்திற் களிப்புளதாயிருப்பதுபற்றியே. ஈசுவரன்மாட்டுப் பணிதவறுதல் பற்றி விசாரமுண்டாயின் அசுத்த வாதனை உளதாகாது.

தான் பிறனுக்கு யாதும் நன்றி செய்தவன், அதற்காக ஏதும் பதில் பெற்றுவிடவேண்டு மென்று அவசரப்படுவோன் மிகப் புத்திகுறைந்தவன். நன்றிகளுக்குப் பதில் பெற்றுவிடுதலினும் பெருமையே தகுதி.

நன்றி செய்வது நன்றிகேடனுக்கே செய்தல் வேண்டும். உபகாரஞ் செய்வது பதில்செய்ய மாட்டாதவனுக்கே செய்யவேண்டும்.

தீயவொழுக்கத்துக்குக் காரணம் அஞ்ஞான பந்தம். எவனொருவனை அவன் தீக்குணம் பற்றிப் பழிக்கின்றோமோ அஞ்ஞான பந்தமுடைய மற்றும் யாவரையும் அங்ஙனமே பழிக்கவேண்டும். அஞ்ஞான காரணமான தீக்குண முடையவர்களுள் அதை அற்பமாக உடையவர்களுஞ் சரியே; அதிகமாக உடையவர்களுஞ் சரியே; அதில் ஒன்று உடையவர்களுஞ் சரியே; பத்து உடையவர்களுஞ் சரியே; நூறு உடையவர்களுஞ் சரியே; ஆதலால் தீக்குணமுடையோரை, அதன் காரணம் அஞ்ஞானம் என்பதை விளங்கிக்கொள்ளாமல் இகழ்வதெல்லாம் தவறாகும். உயர்ந்த வகுப்பிற் கற்க வந்த மாணக்கர், தாழ்ந்த வகுப்பிற் கற்றுகிற்பாரை இகழ்தல் தவறு.

பிறரை இகழ்வதெல்லாம் பொறாமையும் செருக்கும் பற்றியன; காருண்ணியம் பற்றியன வன்று.

பிறரை அவர் தீக்குணம்பற்றி நாம் இகழும் போது அங்ஙனம் இகழ்தலாகிய அதுதானே முதல் நம்மில் தீக்குணமாகின்றது.

தானும் தன்பாலுள்ள குற்றங்களால் இகழப் படற்குரியவனாயிருந்துகொண்டு தான் பிறரை அவர் குற்றம்பற்றி இகழ்தல் எவ்வளவு மடமை? இது பொறாமையின்பாற் படுகின்றது.

எவர்களையும் எந்த க்ஷணத்திலும் மரணத்துக் குரியவர்களாகவே தெளியவேண்டும். எவரொரு வரையாவது ஏதொரு கால நியதிக்குரியாராக மதித்துப் பற்றுச் செய்தொழுகுவது அறியாமை யாகும்.

நீ உன் மனைவி மக்கள் முதலிய குடும்பத் தார் மேலே பற்றுச்செய்தொழுகுகின்றாய்; வேண் டியவழி ஈசுவரனால் அது நீக்கவியலும். அங்ஙனம் இயலுமாயிருக்கவும் அவர் அது செய்யாதிருத்தல் நீ பற்றுச்செய்து வருந்தவேண்டியே. பற்று

அன்பின் காரணமாயிருக்கின்றது. அன்பு சுகங் காரணத்தா லுண்டாவதாயிருக்கின்றது. சுகத்தை வெறுத்தால் எல்லாச் சங்கடமுந் தொலைந்துவிடும்.

ஈசுவராநுக்கிரகத்தினால் நமக்குப் புலப்பட்டிருக்கிற மெய்யுணர்வை உலகத்தார்க்குப் போதித்து அவர்களைத் திருத்துவது தக்கதன்றோ வெனின்; ஈசுவரனே சகல ஆன்மாக்களையும் அவரவர் பக்குவத்துக்குத் தக்க நிலையில் வருவித்துத் திருத்திக்கொண்டுவருகிறார். அங்ஙனமாக, நாம் ஒன்றை முன்னிட்டுச் செய்வது ஈசுவரன்மேல் அறியாமை யேற்றுவதாய் அவர் கிருத்தியத்துக்கு மாறாய் முடியும். ஆதலால், திருவருள் வசப்பட்டுநின்று செய்யுங் காலம் வந்தால் மாத்திரமே இதை மாத்திரமன்று மற்றும் ஆகவேண்டிய எவற்றையும் இனிது செய்யலாம். அந்நிலையில் அது ஈசுவரச் செயலாகும். ஆகவே ஈசுவரனே எதையுஞ் செய்யவேண்டியவர் என்பது முடிபாகிறது.

உலகத்திலே ஆன்மாக்கள் பலவும் பாவிகளாய் மோக்ஷ நிலைக்கு அபாத்திரராய் உழல்கின்றார்களேயென்றால், அவர்களை யெல்லாம் அவரவர்

பக்குவமுணர்ந்து அங்ஙனம் நடத்துவான் ஈசுவர ஞயிருக்க நமக்கு அதில் பேச்சு யாதுக்கு?

உலகத்தின் நடபடியெல்லாம் ஈசுவர ஆஞ்ஞையோ, அன்றோ?

நம்மினும் நமக்கினியவன் ஈசுவரன்; அவன் எல்லாச் சீவர்களுக்கும் சகாயனுயிருக்கின்றான். இந்த உண்மையை ஒப்புக்கொள்வோன், பிற சீவரால் தனக்குவரும் இடையூறுகளுக்கு அஞ்சு வது நம்பிக்கைக்கு விரோதம்.

## சமுசாரிகளுக்கு.

சமுசாரிகளே, நீங்களும் மற்றும் சாதுக்கள் போல ஆன்மலாபத்துக்கு உழைக்கிறதற்குத் தடை என்னவிருக்கிறது? § சமுசாரத்தால் எப்பொழு தும் குடும்ப சம்ரக்ஷணைக்கான விவகாரங்களே

---

§ ஈசுவரனுக்கு அடிமைத்திறம் பூண்டு புறத் தாலும் அகத்தாலும் அகோராத்திரம் இடை யறமல் அவனுக்குத் தொண்டுபுரிதல்தான் ஆன்ம லாபத்துக்கு உண்மையான வழி. அகத்தொண் டாவது, உட்பூசையும் தியானமுமாம்.

மிஞ்சியிருப்பதால் ஈசுவரனுக்குத் தொண்டுபட் டுய்ய நமக்கு நேரமில்லை என்பீர்களானால், விவ காரங்களிற் சென்று மிஞ்சின நேரம் நமக்குக் கிடைப்பதில்லையா? அப்பொழுது யாதுசெய்கின் றீர்கள்? ஈசுவரனையும் சிந்தித்தபடியே செய்யத் தக்கதான விவகாரங்களை நீங்கள் நடத்தும் பொழுது அங்ஙனம் சிந்தியாமைக்கு நியாய மென்னை? நீங்கள் அங்கும் இங்குமநடந்துசெல்லும் காலங்களில் யாது செய்கின்றீர்கள்? உங்களுக்கு ஓிவாகக் கிடைத்திருக்குங் காலங்களில் இடை யறுமல் தொண்டு புரிந்து, விவகாரங்களை நடத்தும் காலங்களிலும் குடம் எடுத்தாடுவாள்போல ஈசு வரன்மேற் சிந்தை வைத்தபடி வருந்தி விவகாரங் களைப் புரிவீர்களானால், அப்பால் ஈசுவரன் உங்கள் ஊழியத்தின் மேல் இரங்கி, நீங்கள் விவகாரங்க ளற்றுச் சதா தனக்குத் தொண்டு புரியத் தக்க நிலையில் உங்களை ஈசுவரன் நியமிப்பார். தனக்குத் தொண்டு புரிய இஷ்டமில்லாதவர்களான உங்க ளுக்கு அவரேன் விவகாரங்களைக் குறைப்பார்? தோட்டக்காரனை ஒரு வறிஞனுடைய பையன் கல்விகற்க விரும்பித் தோட்ட வேலையை அசட்டை பண்ணினன். தந்தை அவனுடைய எண்ணத்துக்

கிணங்காமல் கடினமான வேலைகளை அவனுக்குப் பணித்தான். பையன் கல்வியின் விருப்பத்தினலே அந்தக் கடினமான வேலைகளையும் அவ்வப்போதும் முடித்துக்கொண்டு கல்வியையும் அந்தவேலை முயற்சி தவருமல் அதனேடு சாமர்த்தியமாய்க் கற்றுவந்தான். தந்தை, கல்வியில் மிஞ்சின பரிபக்குவமுடைய தன் மகனது நிலைமையை நன்ருயுணர்ந்து பின்பு அவன்மேல் இரங்கி அவனை முழுக்காலமும் கல்வி கற்கவே நியமித்தான்.

## புண்ணியம்.

புண்ணியங்க ளெல்லாவற்றினும் விசேட புண்ணியமாவது பிறர் செய்த நீங்கைப் பொறுத்தல். இது விவகாரிகட்கே.

பாவங்க ளெல்லாவற்றுள்ளும் கொடியதாவது நண்பின் கிழமையால் நம்பி நன்மைசெய்ய முயன்று குற்றப்பட்டாரை வெகுளுதல்.

நீ ஈசுவரனுக்குப் பிள்ளையாயிருக்கவேண்டுமானல் எப்படி ஒழுகவேண்டும்?

குழந்தையானது தனக்குச் சம்பவிக்கும் யாதொரு விஷயத்திலும் விசாரமில்லாதிருப்பது

போல நீயும் அங்ஙனம் ஒழுகுவாயானல் அதுவே ஈசுவரனுக்கு நீ குழந்தையாயிருக்க விதம்.

## ஈசனுக்குகந்தவன்.

மற்றெவ்வித துர்க்குணம் உடையவனாயிருப் பினும் செருக்கற்றவனாயிருப்பவனில் மாத்திரமே ஈசுவரன் பிரிதியாயிருப்பர். செருக்கான நடை உடையவனை அவனிடத்தே அதைக் காண்பார் யாவரும் வெறுக்கின்றனர். சர்வவியாபியாய் எல் லாவற்றையும் காண்பவனாயிருக்கிற ஈசுவரனுக்கு அது எவ்வளவு வெறுப்பாயிருக்கும்? செருக் குடையான் எவ்வளவு வழிபாடு செய்யினும் ஈசு வரனால் அவனுக்கு அநுக்கிரகம் கிடைப்பதும் அரிது. செருக்கொன்றே பிறர் பொருமை செய் தற்கு முழுதும் காரணமாம். ஆதலால் செருக்கு தன்னை யுடையானை எல்லாவிதத்தாலும் அழிவு செய்யும்.

செருக்கற்றவனில் (அடக்கம் உடையானில்) ஒருவரும் பொருமை செய்பவராயிருக்கமாட்டார். எவரும் அவன்பேரில் தயவுடையவராயும் அவன் மேல் எளிதில் இரங்கி உதவிக்குரியவராயும் இருப் பர். ஈசுவரனும் இவன்மேல் அங்ஙனமே.

தனக்கு வரக்கடவதான கட்டம் ஒன்றையும் உணரவொட்டாததான களிப்புக் குணமும ஈசுவா னுக்கு வெறுப்பைத் தரும்.

## பொறுமைக்கும் கோபத்துக்கும் வேறுபாடு.

இவற்றிற்கு வேறுபாடென்னை? இரண்டும் ஒன்றற்குரிய பரியாயமுமல்ல. ஒருவன ஒரு குற்றத்தைச் செய்யும்போது அஃதொன்றே சிற் சிலரால் பொறுமையாகவும் சிற்சிலரால் கோபமாக வும் கொள்ளப்படுகின்றது. தங்கள் மகிமையைப் பெரிதாக அபிமானிக்கின்றவர்கள், ஒருவன் தமக்குச் செய்த குற்றத்தை "இவன் நம்மை மதியாமல் இங்ஙனம் செய்யவா"? என்று அதனைப் பொறுமையின்பாற் படுத்துகின்றனர். இனி, தமக்கு மகிமையை அவ்வளவாக அபிமானியாத மற்றொரு சாரார் அதே குற்றத்தைக் கோபத்துக் கிடமாக்குகின்றனர். தமக்கு மகிமையைப் பெரி தாக அபிமானிப்போர், பிறர், தம் செருக்கைப் புலப்படுத்துவதாய்ச் செய்யுஞ் செயல்களையெல்லாம் பொறுமைக்கிடமாக்குவர். ஆதலால் செருக்கே பொறுமையை விளைத்தற்கு மூலகாரணம்.

ஈசுவரனிடத்திலே வேண்டிக்கொள்ளும் பிரார்த்தனை எவனுக்குத் திடமாகக் கிடைப்பதாகும்? ஈசுவரனுக்கு அடிமைத்திறம் பூண்டவன், ஈசனுக்குப் பூசனை, தவம், முதலிய பிரீதிகளைப் போதியதாகச் செய்தே பெற்றுக்கொள்ளல் வேண்டும். அப்படிச் செய்தும் தான் வேண்டியது கிடையாதாயின், ஈசுவரனுக்குத் தான் செய்த பிரீதி போதாதெனவறிக.

மேலும், தான் பாடுபட்டுத் தேடாத பொருளைக்கொண்டு ஈசுவரப் பிரீதியேனும் தான தருமங்களேனும் செய்பவனுக்குப் பலன் கிடைப்பது அதற்குத் தக்கவிதமாயேயிருக்கும்.

இனி, ஈசுவரனுக்கு அடிமைத்திறம் பூண்டவன்தான் ஈசுவரனிடத்தில் வேண்டுவதைப் பிரார்த்தனை மாத்திரத்திற் பெறத்தக்கவனாயிருப்பன். ஈசனுக்கு அடிமைத்திறம் பூண்டவனாவான், பலத்தைக் கருதி ஒன்றையும் செய்யாதவனும், ஈசன் தனக்கு முழுதும் உபகாரியாயிருக்கும் நன்றியையுணர்ந்து அதற்குக் கடப்பாடாக என்றும் அவன்மாட்டு நிறைந்த அன்பினால் இடையறாத் தொண்டுடையவனும், ஈசுவரனுக்கு வெறுப்பாவனவாய செருக்குக் களிப்புப் பொறாமை கோபம் லோபம்

என்னும் தீக்குணங்களை அழித்து அவனுக்குத் தயவுபிறக்கும் வண்ணம் பிறராலும் பிறவற்றாலும் உண்டாகும் ஹிம்சைகளைப் பொறுத்து ஒழுகு பவனுமாயுள்ளவன். இவனும் ஈசுவரனுக்கு மேலாகப் பிறிதொன்றை மதியாதவனு யிருந்தாற்றான் வேண்டிய பிரார்த்தனையைப் பெறத்தக்கவனுவன். எவன் ஈசுவரனையன்றிப் பிறிதொன்றைத் தன் மனத்திற் சிந்திப்பவனுயிருக்கின்றானே, அவன், தான் சிந்திக்கும் அவற்றை ஈசுவரனிலும் மேம்பட மதித்தவனுவன். ஆதலால் ஈசுவரனையன்றிப் பிறிதொன்றையும் சிந்தியாதவனே ஈசுவரனை மேலாக அபிமானிக்கின்றவன்.

"சாப்பறைத் தொழிலாளிக்குச் சுடலைஞான மில்லை" அதுபோலவே, கற்றும் கற்றும் அவற்றால் விதிக்கும் ஒழுக்கம் திருந்தி வாராதவனுக்குக் கற்பனவற்றாற் பயனில்லை.

உன் பக்ஷத்தில் எதும் சீவநாசம் முதலான பெரும் துன்பங்கள் நேரிடும் காலங்களில் அவற்றை நீ மற்றொரு வழியாலும் பரிகரிக்க இயலாமல் முடிந்த சமையத்தில் மாத்திரமே ஈசுவரனைத் துணைவேண்டிப் பிரார்த்திக்கிறாய். இது சமை

யத்தில் ஈசுவரனிடத்திலே உனக்குண்டாகிய அடிமைத் திறத்தை நீ சதாகாலமும் இங்ஙனமே பேணி ஈசுவரனுடைய துணையையே என்றும் எல்லாவற்றிற்கும் நம்பி நடப்பாயானால் உன் பிரார்த்தனை கைகூடுந்தான். மற்றொரு பக்ஷத்தாலும் இயலாதபொழுது மாத்திரம் நீ ஈசுவரனைத் துணை கேட்பாயானால் அவர் உனக்குத் துணைச்செய்ய வருவாரா? உனக்கு மற்றொன்றினும் இயலாத பக்ஷத்தில் ஈசுவரனிடம் துணை வேண்டுவதை, மற்றையவற்றால் இயலுந் திறங்களிலும் அவருடைய துணையைத்தான் வேண்டிக் கொண்டாலென்ன!

ஒருவனுக்கு இடம் பொருள் ஏவல்கள் எவ்வளவுக்கில்லையோ, ஈசுவரனுடைய துணை அவனுக்கு அவ்வளவுக்கு வேண்டியதாயிருக்கும். ஆதலால் இடம் பொருள் ஏவல் ஒன்றும் இல்லாமையே ஈசுவரன் துணையை அதிகம் வேண்டுவதற்கிடமாய் முடிந்து அவனுடைய சம்பந்தத்தை வளர்விக்கும் ஆதலால் அதுவே நன்மை. எவ்வளவுக்கு இடம் பொருள் ஏவல் மிகுதியோ அவ்வளவும் ஈசுவரனை மறத்தற்கிடமாகும்.

பிற சீவர்களை எல்லாவிஷயத்திலும் தானாகக் கருதி நடப்பதுதான் அருள். அதற்கு மறுதலையாக வேறாகக் கருதி அவற்றினும் தனக்கு மேம்பாடும் சுகமும் வேண்டுவது பொறாமை. பொறாமையுள்ளமட்டும் துவித பாவனையும், துவித பாவனையுள்ளமட்டும் பொறாமையும் நீங்காமலேயிருக்கும்.

ஈசுவரன் உனக்கு மெய்யுணர்வைத் தருவது நீ அவற்றாற் கடைத்தேறும் பொருட்டன்றோ. அங்ஙனமாக, நீ அவற்றைப் பக்குவமுமில்லாத பிறர்க்குப் போதித்து அதுகாரணமாக உனக்குக் கீர்த்தி சம்பாதிக்க முயன்று கொள்வாயானால் உனது நிலைமை யாதாகின்றது? நீ இங்ஙனம் ஒழுகுவது உனக்குக் கீர்த்தியாகிய மேம்பாடு கருதியல்லவென்பையாயின், உன்னிலும் உனக்கினியார் பிறரெனக்கருதியோ, நீ பெறக்கடவதாய நன்மைகளையும் இழந்து அவர்க்குப் போதிக்கின்றாய்? முளைக்கத் தகாத இடத்திலே வித்தை விதைப்பார் யாவர்? பசித்து வருந்தி வந்து வேண்டுவானுக்கன்றோ உணவு கொடுப்பது. பசியாதவனுக்குக் கொடுக்கும் உணவு தோஷங்களையன்றோ விளைக்கும்.

## அருள்.

தன்னைப்போல்வனவே பிற ஆன்மாக்களும் என்பதையுணர்ந்து அவ்வாறொழுகுவது அருள்.

## அன்பு.

யாவராயினும் தனக்கு இன்பந் தருவார்களிடத்து உண்டாகும் விருப்பு அன்பு எனப்படும்.

## கோபம்.

யாவராயினும் தனக்குத் துன்பந் தருவார்களிடத்து உண்டாகும் வெறுப்பே கோபம் எனப்படும். தமக்கு மேம்பாட்டை அபிமானிக்கும் அகங்காரிகள் தமக்குத் துன்பந் தருவாரைப் பொறுமைக்கிடமாக்குவர். ஒருவன் பிறருக்குத் தன் செருக்கைப் புலப்படுத்துவதால், தானே அவர்க்குப் பொறுமையை விளைக்கிறான். பொறுமை கொள்வோனிலும அதற்குக் காரணம் விளைக்கும் இவனே தப்பிதமுடையோன்.

## பத்தியோகி.

காமக்குரோதாதி துர்க்குணங்களை யெல்லாங் கழற்றி அதன்மேலே பழைமையான வாதனைகளும் கழன்று நினைவறப் பயின்ற முடிவை யுடையது ஞானயோகம்.

அங்ஙனம் துர்க்குணமெல்லாம் அழியமாட்டாதாருள்ளே சிற்சிலர் ஈசன்மேலே மிக்க அன்பு வாய்ந்தவராய், அதனுல் அவ்வீசனை மறக்கமாட்டாராவர். அதனுல் அவர் பிரபஞ்சவாதனை அனைத்தையும் மறந்தவராய்த் தலைப்பட்டுப் பக்தியோகிகள் எனப்படுவர்.

"நாச்சியார் நினைத்தூட்டுவதொன்று; யான் நினைத் துண்ப தொன்று". § ஈசுவரன் சீவர்களுக்கு மாயா போகங்களை நுகர்விப்பது அவர்களுடைய பாசத்தைக் கழற்ற. மெய்யுணர்வில்லாத சீவர்கள் அந்த உண்மையைத் தெரியாதவராய்ச் சனனந்தோறும் தமக்குக் கிடைத்திருக்கிற மனைவி மக்கள் நண்பர் வீடு பொருள் பண்டம் ஜனன பூமியாகிய மாயாபோகங்களை நித்தியமெனக் கருதி அவற்றல் இன்பத்தை நுகர்வதும் துன்பத்தை இகப்பதும் தமக்குரிய பிரயத்தன மெனக்கொண்டொழுகாநிற்பர். அதுவும் அவர்கள் பக்குவத்

---

§ நாச்சியார் அன்னத்துக்கு மிச்சமென்று தவிட்டுக்கழியை யூட்ட, அடிமை இதனை இப்போது உண்பதால் பின்பு சோற்றை அதிகமாக உண்ண வயிறு இடந்தரும் என்று நினைத்து உண்டான் என்பது.

துக்குத் தக ஈசுவரனது ஆஞ்ஞை வயந்தான். மெய்யுணர்விற்கொப்ப ஒழுகும் ஒழுக்கமே பக்குவம்.

செருக்கைப் போலவே களிப்பும் ஈசுவரனுக்கு வெறுப்பைத் தருவதாகும். க்ஷணத்திலே வரக் கடவதாகிய இடர்களை உணரவொட்டாமலும், தான் பெறக்கடவதாகிய உறுதியை நினைய வொட்டாமலும் தடைசெய்த மடைமையின் களிப் பாளிகள் அற்ப அறிவினர்.

உனக்குச் சுகத்துக்குக் காலம் வரும்போது மகிழ்வதுஞ் செய்யாதே; துன்பம் வரும்போது அதன் காரணங்களில் வெகுள்வதுஞ் செய்யாதே. இவையும் ஈசுவரனுக்கு வெறுப்பைத் தருவன.

உனக்குத் துன்பங்கள் வரும்போது அவற்றை ஊட்டுகின்றான் ஈசுவரனே என்பதை நன்கு தெளிந்து திடம்பெறுவாயாயின், அது ஈசுவர னுக்கு உன்மேல் மிக்க பிரீதியைத் தரும்.

மாநுடராகிய நமக்கு உறுதியாக வேண்டும் பிரயத்தனம் யாது? ஈசுவரப்பிரீதியான ஒழுக்கம்.

நாம் பிறரை அவரது குற்றங்களைக் கண் டிக்கில், அது அவரது நயம் கருதி நாம் செய்வ

தாயிருக்கவேண்டியது. நமது கோபம் பொருமை முதலியவற்றின் ஆறுதற்காக அது செய்வோமாயின் அது ஈசுவரனுக்கு அப்பிரீதியாயிருக்கும்.

ஈசுவரன் ஆன்மாக்களுக்கு இன்பத் துன்பங்களை ஊட்டுவதெல்லாம் சடசித்துக்களைப் பிரேரித்து நின்றே யல்லாமல் தாமாய் வெளிப்பட்டல்ல. பிறரால் நமக்கு இம்சை உண்டாகும்போது அதற்காக ஈசுவரனை வேண்டுவதும் முறைப்படுவதுமே செய்யத்தக்கது. அது பற்றியே நன்மை உண்டாகற்பாலது. இங்ஙனமன்றி இம்சை யுண்டாகும் விஷயங்களில் சீவர்களிற் சிறி அழுக்கறுத்துக் கடுமொழி புறங்கூற்றுக்களை வழங்கி அவர்களைக் குற்றந் தூற்றுவது நமது காலத்தையும் பாழாக்கி நமக்கு அஞ்ஞானத்தையும் நிலைப்படுத்தி ஈசுவரனுக்கு நம்மேல் வெறுப்பையும் நாம் பெற்றுக்கொள்வதாகும்.

பிறர் தீங்கு செய்தால் அதற்காக ஈசுவரனோடு குறைகூறிக்கொள். செய்தார்மேல் ஒரு பிரயத்தனமும் வேண்டாதே,

பிரபஞ்ச விவகாரமொன்றையும் முக்கியமெனக் காட்டஞ்செய்யாமல் எப்போதும் உன்மனம் ஈசு-

வரன் றிருவடியையே முக்கியமெனப் பற்றி அபி மானிக்குமாயின் அப்போது ஈசுவரனது பாது காப்பு உனக்கு முழுதும் கிடைப்பதாகும்.

நாம் விரும்பும் நன்மை உண்மையின் பக்கத்தே யிருக்கின்றது; ஆனால் அது உண்மை யல்ல. தீமை அநுபவம் நிகழும்போது கஷ்டப் பட்டு நாம் அதிற் றுக்குறாதவண்ணம் தப்பித்துக் கொள்ள வழியறிந்த பின் நன்மையினது சுகத் திலும் மகிழாதபடி கற்றுக்கொள்ளவேண்டும். ஏனெனில், நன்மையின் சுகமும் தீமையின் துக்க மும் நம்மால் அநுபவித்து முடிவு பெறுவனவா யிருத்தலால். (1)

நீதிகளைக் காட்டிலும் அநுபவமே சிறந்தது. அநுபவத்தின் மூலமாய் வாழ்க்கையில் புண்பட்டு, அடிபட்டு, நொந்து கண்டறிந்தவற்றிலிருந்து நாம் உணர்ந்துகொண்ட அநுபவ ஞானங்களால் ஒருவாறு கடைத்தேறலாம். (2)

நீ எப்பொழுதும் கொடையாளனாகவே யிரு. எல்லாவற்றையும் கொடுத்துவிடு; பிரதியுபகாரம் பெற விரும்பாதே; முக்கியமாக உன் அன்பைக் கொடு; யாதொரு நிபந்தனையுமின்றி உன் சேவை

யினுற் சகாயஞ்செய்; ஈசுவரன் நமக்குக் கொடுப்பது போல, நாம் உண்மையான உதாரத்துவத்தினுற் கொடுப்போமாளுல் உறுதி பெறலாம். (3)

ஈசுவரன் ஒருவனே கொடையாளி. ஈசுவர பத்தி எல்லா இச்சைகளையும் தடுப்பதற்குச் சாதனமாயிருப்பதால் எல்லா இச்சைகளையும் பூர்த்தி செய்ய அதை உபயோகிப்பது பெருந் தவருகும். (4)

எல்லாச் சிந்தனைகளையும் எல்லாச் செய்கைகளையும் எல்லா வார்த்தைகளையும் ஈசுவரனிடத்து அர்ப்பித்தும் நாம் ஈசுவரனை அணுவளவேனும் மறந்திருப்போமாயின், அது நம்மைப் பெரிய துக்கத்திலமிழ்த்திவிடும். ஏனெனில் இவற்றை அர்ப்பிப்பதும் நாம் அவரை மறவாதிருத்தற்கேயாதலால். (5)

அத்தியந்த அன்பும் உத்கிருஷ்ட (மேலான) ஞானமும் ஒன்றே. ஆனுல், ஈசுவரனைப்பற்றி வாய்ஞானம் பேசுதல் உபயோகப்படுவதல்ல. (6)

ஈசுவரனிடத்துண்டாகிய மெய்யன்பு மேலிட்டினுல் எவனெருவன் உலக வழக்கங்களையும் சாஸ்திர வழக்கங்களையும் மறந்துவிடுகிருனே அவனே சந்நியாசி. (7)

அன்பாகிற சூரியன் ஒருவனது இருதயத்திலே உதயமாகத் தொடங்கும்போதே அவன் எத்தகைய கர்மங்களையும் ஈசுவரப் பிரீதியாகவே செய்ய ஏவப்படுவான். (8)

உலகத்திலே நாம் சுகமென்று கருதுகின்ற ஒவ்வொரு சுகத்துக்கும் பின்னே துக்கம் உண்டாகின்றது. [நமது புத்தி எதில் எவ்வளவு சீக்கிரமாக அபிவிருத்தி யடைகின்றதோ அவ்வளவு சீக்கிரமாக ஒன்று மற்றதைப் (சுகத்தை அல்லது துக்கத்தைப்) பின் தொடர்கின்றது.] நமக்குச் சுகமும் துக்கமும் மாறி மாறி வருவதால் நிலையுடையனவன்று. அன்றியும், சுகமும் துக்கமும் முறையே பொன் விலங்கும் இரும்பு விலங்கும் போல்வனவாம். (9)

ஒருவன் தனது நினைவின் வழியிலே செல்கிறான்; அதன் மயமாகவே ஆகிறான். ஆகையால் நாம் நினைக்கும் ஒவ்வொரு நினைப்புகளிலும் விழிப்பாய் அதாவது மிகவும் சாக்கிரதையாய் இருந்து உண்மைக்குத் தடையாயுள்ளவற்றினின்றும் மீட்டால் பரிசுத்த நிலைமையை யடையலாம். (10)

புலன்களைத் திருப்தி செய்வதே சுகானுபவ மென்பது கொளுத்த மூடக்கொள்கையாம். அதில் உண்மையான சுகம் என்பது அற்பமுமே கிடையாது. அநுபவிப்பவனது முன்னிட்ட இச்சை மிகுதியே சுகம்போலத் தோற்றியது. (11)

உனக்குள்ள அஞ்ஞானம் அகலும் பொருட்டாகப் பிறர் குற்றத்தைப் பொறு. உன்மேல் உனக்கு எப்படிப் பிரீதியோ மற்றையவர்கள் மேலும் நீ அப்படியாயிரு.

துஷ்டன் சொல்லுகிறான்: எனக்குப் பிற ஜீவர்களை என்னைப்போலக் காணும் அருள் இன்னும் உண்டாகவில்லை. நான் பிறரை எவ்விதம் இம்சை பண்ணுகிறேனோ அவ்விதம் நானும் ஈசனால் பிறரைக்கொண்டு இம்சிக்கப்படுவேன்; என் பொருட்டு நீங்கள் இரங்கவேண்டாம்; ஈசனிருக்கிறார். நீங்கள் என்னைத் துஷ்டன் என்று குறை கூறுவதும், தூற்றுவதும், கண்டிப்பதும் எல்லாம் உங்கள் அஞ்ஞானமே. இப்படிப்பட்டவர்களிடம் அருள் எங்கே இருக்கிறது? நான் செய்வதற்குத் தக்க தண்டனையை நான் பெறுகின்றேன். நீங்கள் என்னைக் குறைகூறி உங்களுக்குரிய அருளை அழித்துக் கெட்டுப்போகாமலிருங்கள்.

பிறரால் நமக்குத் துன்பம் உண்டானபோது அவர்களை நாம் குறைகூறுவதெல்லாம் நமக்குள்ள அழுக்காறே (=மனக் கோட்டமே). துன்பஞ் சகிக்கமாட்டாமை பற்றியாயின், சடப்பொருள் களாலும் மிருகங்களாலும் ஈசுவரன் துன்பங்களை ஊட்டும்போது நாம் ஒப்புக்கொள்ளவில்லையா?

பிறரிடத்தே துன்பங் கண்டவழி அவர்மேல் நாம் இரங்குவதுபோல ஆன்மாக்களிடத்தெல்லாம் கோபம பொறாமை களிப்பு லோபம் முதலிய துர்க் குணமாகிய அஞ்ஞானநோய் காணும்பொழுதெல் லாம் அவர்கள்மேல் அவைபொருட்டாக நாம் இரங்கல் வேண்டும்.

ஈசுவரனுக்குப் பிள்ளைகளாயிருக்கும் ஆன் மாக்கள் எல்லாவற்றுள்ளும் மெய்யுணர்விற் றேறிய வைகள் முதியவைகளுக்கும், மெய்யுணர்வு வராத வைகள் குழந்தைகளுக்கும் சமமாம்.

பிரபஞ்சத்திலே ஒருவனுக்குச் சம்பவிக்கும் எவ்விதமான துன்பமும், பிள்ளைக்குக் கல்விப் பயிற்சிபோலும், ஒருவனுக்குச் சம்பவிக்கும் சகல வித இன்பங்களும், ஒரு பிள்ளையை ஆடை அணி ஊண் முதலிய எல்லா உதவிகளும் ஊட்டி அதனைக் கற்கவிடாமற் காலங் கழிப்பிப்பது போலுமிருக் கின்றது.

ஆன்மாக்களெல்லாம், ஈசுவரனுக்குப் பிள்ளைகளான ஒரே நிலைமை யுடையனவாயிருந்தும், பிரபஞ்சத்திலே அவைகளெல்லாம் வெவ்வேறான நிலைமையிலிருப்பதனால், நான் புருஷ ஆத்மா, இவள் மனைவி ஆத்மா, இது பிள்ளை ஆத்மா, இது சகோதர ஆத்மா, இது அடிமை ஆத்மா, இது மாடாத்துமா, இது நாயாத்மா என்று இவ்விதமே தாரதம்மியம ஏற்பட்டவைகள் போல் மயங்கப்படுகின்றன. இதை மெய்யுணர்வால் அகற்றி உண்மை காணவேண்டும்.

ஒரு பிதா தன் வீட்டுக் கருமங்கள் நடைபெற வேண்டித் தன் பிள்ளைகள் பலருள்ளும் ஒருவனைச் சமைக்கவும், ஒருவனை வேட்டி தோய்க்கவும், ஒருவனை வீடு பெருக்கவும், ஒருவனை மாடு பார்க்கவும், ஒருவனைக் கணக்கெழுதவும், ஒருவனை எல்லாருக்கும் அதிபதியாய்க் கருமங்களை நடப்பிக்கவும் அவரவர் அளவுகண்டு நியமித்தான். எந்நிலையிலிருந்தாலும் எல்லாரும் அப்பிதாவுக்குப் பிள்ளைகள் என்பதிற் சந்தேகமா?

நான் ஒருவனை என் அடிமை எனவும், என் பகைவன் எனவும், என் நட்பினன் எனவும் இவ்வாற்றாற் பலரிடத்தும் வேறுபாடு வைத்து நோக்கு

வது போல, ஈசனும், என்னையும் அப்பிறரையும் அவ்வாறு வேறுபாடு வைத்து நோக்குவாரோ!

துன்பங்களிலே பரீக்ஷைப்படாதவன் கல்லாத பிள்ளைக்குச் சமமானவன். அதிற் பரீக்ஷைப்பட்டவன்றான் கற்றுத் தேறினவனுக்குச் சமம். கல்வியிலும் பெரியது துன்ப அநுபவம்.

## அருள் எவனுக்குவரும்? எவனுக்குவராது?

தொந்தரை என்று அஞ்சிக் குடும்ப பாரத்தை விட்டுச் சஞ்சலமற்றிருக்கலாமென்று வனவாசமாய் இருப்பவனுக்கு அருள் உண்டாக இடமில்லை. குடும்ப பாரத்தோடிருப்பதனால் கோபம் பொறாமை களிப்பு லோபம் முதலான துர்க்குணப் பிரவிர்த்திக்கு இடமுண்டாக, அவற்றை மெய்யுணர்வாற் களைந்து, மெய்யுணர்ச்சி கொண்டும் களைதற்கரிய இத்துர்க்குணங்கள், அஃதில்லாத சாதாரணர்க்கு எவ்வளவு துன்பம் பயப்பனவா யிருக்குமென்று தன்னிற் கண்டவாறு பிறரிடத்துக் கண்டு திருந்தும் நடுவுநிலைமையுடையானுக்கே அருள் கைகூடும்.

பிறருடைய சரீரவருத்தம் வறுமை இவற்றைக் கண்டு வருந்துவதன்று இரக்கம். பிறருக்குடைய கோபம் பொறாமை முதலிய அஞ்ஞானப்பிணி

கண்டு அவை பொருட்டாக இரங்குவதே இரக்கம். முன்பு தன்னிடத்தே அவ்வருத்தங் கண்டு, பின்பு பிறரிடத்தும் அவை அத்தன்மையவாம் என்று காண்பானுக்கு வருவதே அருள்.

ஒருவன் தான் குற்றமற்றவனுயிருக்கவேண்டுமாயின், தான் பிறர் குற்றம் பொறுப்பதொன்றையும் விரதமாய் அநுட்டிக்கவேண்டியது. பிறர் குற்றம் பொறுத்து, அதற்காக அவர்கள்மேல் இரக்கமுடையவன் எவனே அவன்றான் குற்றமற்றவனுவன்.

ஒருவன் கோபம் பொருமைகள் மீறி என்னை இழிவாக வைது கன்னத்திலும் அடித்தான். இதனுல் எனக்கு வந்த நட்டம் ஒரு அடியும் சில ஏச்சுந்தான். அவன், இதனுல் ஆக்கிக்கொண்ட தேட்டமும், தனது துர்க்குணங்களை ஒழிக்க முயலாமல் அவற்றை ஆக்கிக்கொண்ட நிலைபேறும், சீர்தூக்க, ஐயையோ! எவ்வளவு பெரியவை!!

பிறரால் தனக்குத் துன்பங்கள் நேரிட்டு வருந்துகின்றவனுக்கு அது நுகர்ச்சியுமாய்த், தான் பின்பு பிறருக்கு அவை செய்யாமைக்கு ஏதுவுமாய் மெய்யுணர்வைப் பயக்கின்றது. நான் பிறருக்குத் துன்பஞ் செய்யாமல் திடம் பெறுமட்டும்

எனக்குப் பிறரால் நீங்கு நேரிடும். பிறர் தனக்குந் துன்பஞ்செய்வதும், தான் அதைப் பொறுத்து, அப்பிறருக்கு இன்பஞ்செய்வதுமாகிய இரண்டும் தனக்குத் திருத்தத்துக்கிடமானவை.

பிறர் தனக்குச் செய்யுந் துன்பத்தால் தான் வருந்துகின்றவன், தான் பிறருக்குத் துன்பஞ் செய்யும்போதும அது பிறர்க்கு அவ்வளவாமாதலை யுணர்வான். அதனுல் தான் பிறனுக்குத் துன்பஞ் செய்ய ஏவப்படான்.

தன் வல்லமைக்கு அடங்காமல் கோபம் பொருமை காமம் களிப்பு மதிப்பு முதலிய காரணமாகத் தான் பிறருக்குத் துன்பஞ்செய்ய ஏவப்படுகிறவன், தனது துர்க்குணங்கள் தனக்கு அடங்காமை போலவே பிறருக்கும் அவை அடங்காமையாலன்றே அவர்கள் நமக்குத் துன்பஞ் செய்ய ஏவப்பட்டனர் என்று உண்மை உணர்தலால் தான் பிறர் குற்றம் பொறுப்பவனுவான்.

சாத்தன் தான் பிறனுக்குச் செய்த ஒரு குற்றததுக்காக அரசன் தண்டகனைக்கொண்டு தன்னைத் தண்டிக்குமபோது, தான் அதனைச் சகித்துக்கொள்ளாது சீறுவானுயின், அது அரசனுக்குக் கோபத்தை விளைக்குமல்லவா? அது போல, நாம் பிறனுக்கு முன்னைப் பிறப்பிற்செய்த

தீவினைக்காக ஈசன் இம்மையிலே பிறரால் நமக்குத் தண்டனையுறுத்தும்போது நாம் பொறுத்துக் கொள்ளாது வெகுள்வோமாயின் ஈசன் நம்மை வெறுப்பாரே.

ஆதலால், தீ முதலிய சடங்களாலாதல், விலங்கு முதலிய சிற்றறிவுயிர்களாலாதல், அல்லது மாநுடர்களாலாதல் நமக்கு எவ்வெத் தீங்கு விளையினும் நாம் அவற்றையெல்லாம் நமக்குக் கன்ம பரிகாரமென்று மகிழ்ந்து சகித்தல் வேண்டும்.

ஒருவன் தன்னைக் கத்தியாற் குத்திக்கொண்டான். அதற்கு நாம் அவனை வெறுக்க நியாய மென்னை? இதுபோலவே, ஒருவன் நமக்காவது பிறர்க்காவது கோபம் பொறாமைகளால் யாதுந் தீங்கு செய்தபோது அதற்காக நாம் அவனை வெறுப்பதுந் தவறும். நமக்காவது பிறர்க்காவது ஒருவன் ஒரு நன்மை செய்தானாயின் அதில் அவனை நாம் உவப்பதும் வேண்டியதில்லை. ஏனென்றால், ஒருவன், தான் பிறருக்கென்று செய்யும் நன்மை தீமைகளெல்லாம் அவன் பின்பு தனக்கே ஆக்கிக் கொள்ளும் தேட்டமாயிருக்கின்றன. தாம் பட்டு நுகர்வோர்க்குக் கன்மபரிகாரமாகிய பயனையும் பயக்கின்றது. ஆதலால் அவர்கள், அவன்

மீது நன்றி பாராட்டவேண்டியவராயிருக்கின்றனர் ஆதலால், நமக்குத் தீமை செய்வோரை நாம் வெறுத்தால் ஈசன் நம்மை வெறுப்பார்.

பிறரால் தான் இம்ஸைப் பட்டறியாதவன், தான் பிறருக்கு இம்சை விளைப்பவனுயிருக்கின்றுன்.

ஒருவனிடத்துள்ள கோபம் பொறுமை லோபம் களிப்பு என்னுந் தீக்குணங்கள், அவைபற்றி ஏதும் இடையூறு தனக்குச் சம்பவித்தால் ஒருவாறு தணியும். அதுவும் யோக்கியமான தணிவல்ல.

பிறன் தன்பேரிற் றுக்குகின்ற கோபம் பொருமை களிப்புக்களின் அருவருப்பையும் அவற் றுல் தனக்கு வரும் துன்பத்தையுந் தான் சிந்திக்கச் சிந்திக்க அவை தணிவதே யோக்கியம்.

எது காரணமாக நாம் பிறரில் வெறுப்பும் அழுக்காருகிய வன்கண்மையும் கொண்டோமோ அது காரணமாகவே அப்பிறர்மீது நாம் இரக்கம் வைக்கவேண்டும்.

எவர்களும் பிறரைக் குண ஒழுக்கந் தூயரா யிருக்கவேண்டுமென்று கத்துவதும் இறுமுவது மெல்லாம் தம் நயத்தை வேண்டுவதாயேயிருக்கிறது.

